


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
6—10—1968




# காந்தி விட்டுச்சென்ற மரபுகள்

ஒவ்வொருவரும் எந்த அளவுக்கு மாறுதல் அடைந்து வளர்ச்சி பெற்றிருக்கிறார்களோ, அந்த அளவுக்கு காந்திஜியைப் புரிந்து கொள்கிறார்கள். காந்திஜி உயிருடன் இருக்கும் போது என் வயதிலிருந்த பலருக்கும் அவரைப்புரிந்து கொள்வது சிரமமாக இருந்தது. அவரது சில கொள்கைகளை அமிதமான பற்றுதல்கள் என்று கருதி, நாங்கள் சில சமயங்களில் பொறுமை இழந்திருக்கிறோம். அவரது சில கோட்பாடுகளைத் தெளிவற்றவை என்று கருதினோம். அவர் மகாத்மா என்பதை சாதாரணமாக எடுத்துக் கொண்டு, அரசியலில் ஆத்மீக உள்ளுணர்வைப் புகுத்தியதற்காகச் சண்டை போட்டோம்.

இது எனது தலைமுறையினருக்கு மட்டும் பொருந்தும் என்று சொல்ல முடியாது. எனது தந்தை சுயசரிதையில், காந்தியின் தத்துவங்களைத் தங்களது சொந்த சிந்தனை அமைப்பில் ஒன்றுபடுத்திக்கொள்ள அவருக்கும் அவரது தலைமுறையைச் சேர்ந்தவர்களுக்கும் எவ்வளவு சிரமம் இருந்தது என்பதைவிளக்குகிறார். ஆனால் சிறுகச்சிறுக, நமது தேசிய இயக்கத்தின் ஏற்றத் தாழ்வுகளில் அனுபவம்பெற்றபிறகு என் தந்தை காந்திஜியை மேலும் முழுமையாகப் புரிந்து கொண்டார். பிறகு காந்திஜியின் சிந்தனையிலிருந்த முக்கிய அம்சங்களைத் தமது சொந்த சிந்தனையுடன் ஒன்றுசேர்க்க அவரால் முடிந்தது. அவர் காந்திஜியை "ஒரு ஜால வித்தைக்காரர்" என்று அழைத்தார். காந்திஜியின் சிந்தனைகளுக்கு தற்கால உருவம் கொடுப்பதற்காகவும், எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய விதத்தில் அவற்றை எளிமையாக்குவதற்காகவும், இளைஞருக்கும் அறிஞருக்கும் கூட அவற்றைப் பரப்புவதற்காகவும் என் தந்தை தம்மை தாமே அர்ப்பணித்துக்கொண்டார்.

★

பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திராகாந்தி அண்ணல் காந்தியின் மரபுகளை பற்றி எழுதிய கட்டுரையே இது.

★



கேள்வி எதுவும் கேட்காமல், தமது சொற்படி நடந்து கொள்ள வேண்டுமென்று காந்திஜி ஒருபோதும் கூறியதில்லை. முழு சோதனை இல்லாமல் தமது நோக்கங்களையும், அவற்றுக்கானவழிமுறைகளையும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று காந்திஜி விரும்பியதில்லை. அவர் விவாதத்தை ஊக்குவித்தார். ஒரு சிறுமியாக இருந்த போதே நான் எத்தனை தடவை அவருடன் விவாதத்தில் ஈடுபட்டிருக்கிறேன்? எந்த ஒரு நேர்மையான கருத்தையும் அவர் அற்பமாக எண்ணியதில்லை. கருத்து வேறுபாடு கொண்டவர்களுடன் பேசுவதற்கு அவர் எப்போதும் தயாராக இருந்தார். நம் நாட்டிலுள்ள போதகர்களிடத்திலும், வேறு எந்த இடத்தில் உள்ள தீர்க்க தரிசிகளிடத்திலும் இந்த குணத்தைக் காண முடியாது. அவர் தமக்கு முழுமையான அறிவு இருப்பதாய் உரிமை கொண்டாடவில்லை. ஆதலால் அந்தத் துறையில் கூட அவர் ஒரு சாதாரண தீர்க்கதரிசியிலிருந்து மாறுபட்டிருந்தார். நன்றிக்கடனை புகழுரையாக ஏற்றுக் கொண்டதில்லை; தண்டனைக்கு அஞ்சியதும் இல்லை. தமது பணியின் பளுவினால் ஒரு போதும் அழுத்தப்பட்டிருக்கவில்லை. அவர் சிரித்து சிரித்து பேசும் ஒரு அறிஞர்.

காந்திஜியின் பிறந்த தின நூற்றாண்டு விழா ஆண்டு ஜாலியன்வாலாபாக் துயர நிகழ்ச்சியின் 50-வது ஆண்டாக அமைகிறது. கடுமை, கொடுமை ஆகியவற்றுக்கும், வலிமைக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் வருங்காலத்தின் மீது செய்யப்பட்ட இந்த வன்முறை நடவடிக்கையின் விளைவைச் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரே ஒரு நிகழ்ச்சி இந்த அளவுக்கு நாட்டையே குலுக்கி, அதன் நெறி

களையும் நோக்கங்களையும் மறு மதிப்பீடு செய்யும் அளவுக்கு அதிர்ச்சிக்குள்ளாக்கியது. இவ்வாறு நடப்பது மிகவும் அரிதானதாகும். மோதிலால் நேரு, கவி ரவீந்திரநாத் டாகுர் போன்றவர்களின் உள்ளத்தில் இது ஒரு வலிமையான விளைவை ஏற்படுத்தியது. பிரிட்டிஷ் அரசு வழங்கிய கௌரவப் பட்டத்தை டாகுர் உதறித் தள்ளினர். காலனி ஆட்சி முறையின் பிரச்னைகள் பற்றி உணர்ச்சியுடன், நன்கு புரிந்து கொண்டு எழுதினர். எனது தாத்தா, காந்திஜியின் கொள்கையினுல் குடும்பத்துடன் இழக்கப்பட்டார், எங்களது வாழ்க்கை முறை மாறியது, நாட்டின் மனே நிலையே மாறியது. அந்த ஆண்டில்தான் காந்திஜி அரசியல் இயக்கத்தின் சிகரத்தை அடைந்தார். இந்த 50 ஆண்டுகளைத் திரும்பிப் பார்க்கும்போது அவரது தனித்தன்மையின் முழு சக்தியை உணரமுடிகிறது. அவரது அறிவுறையின் ஆற்றலை உணர்கிறேம். இருப்பினும், முழுமையாய் மதிப்பிடுவது நமக்கு அப்பாற்பட்ட செயல். நாம் அவருக்கு மிக அருகாமையில் இருக்கிறேம் என்ருலும், ஒருவித மாறுதல் நிலைமையில்தான் இருந்து கொண்டிருக்கிறேம். இந்தியாவுக்கும் மனித குலத்துக்குமாக அவர் ஆற்றியுள்ள பணியை முழுமையாய் மதிப்பிடுவது பல ஆண்டுகளுக்கு முடியாத காரியமாக இருக்கும். இருப்பினும், அந்த ஒரு வருடத்தில் நமது வரலாற்றுக்கு காந்திஜி அளித்த திருப்பத்தைக் கண்டு வியக்காமல் இருக்க முடியாது. அவரது இரண்டு லேசான கைகளிஞல் மக்கள் அனைவரையும் உயர்த்தினர். பிரமுகர்களும், பணிவானவர்களும் உட்பட ஏராளமான மக்களின் சொந்த வாழ்க்கையில் அவர் எத்தகைய மாறுதல்களைக்கொண்டு வந்தார்! மக்களின் சொந்தவாழ்க்கையில் இந்த அளவுக்கு மாறுதல் செய்வதை விட, அரசியலில் முக்கிய பங்கு ஏற்று நடத்துவது ஒரு பெரிய சாதனையாக இருக்க முடியாது. காந்திஜி பிரமுகர்கள், அறிஞர்கள் ஆகியோருக்கு மட்டுமான அரசியலை நிராகரித்தார். மக்கள் கூட்டத்தின் ஒருங்கிணைந்த செயலுக்கு வழிகாட்டினர்.

இந்த முறையில் தேசிய வாழ்க்கையில் அவருக்கு முன் வாழ்ந்த தலைவர்களிடமிருந்து காந்திஜி மாறுபட்டிருந்தார். மக்கள் கூட்டத்தின் உள்ளத்திற்கு இசைந்த ஒரு தலைவராக அவர் வாழ்ந்தார். மக்களின் உள்ளத்தைப் புரிந்துகொண்டதோடு சில சமயம் அதற்கு வடிவமைத்திருக்கிறர். அவர் அலையின் சிகரமாக இருந்தார், மக்கள் அலைகளாக இருந்தார்கள்.

காந்திஜி நம்மை அச்சத்திலிருந்து விடுவித்தார். நாட்டின் அரசியல் விடுதலை இறுதிப் பலனுக இருக்கவில்லை. உள் உணர்வை விடுவிக்கும் செயலின் ஒரு துணைப் பலனகத்தான் அது அமைந்திருந்தது. இந்தியாவின் சமூகச் சூழ்நிலையில் அவர் செய்த மாறுதல் இதைவிட முக்கியமானது. நமது சமூக பழக்க வழக்கங்களின் சுவர்களிலிருந்தும், தளைகளிலிருந்தும் காந்திஜி நம்மை விடுவித்தார். ஆண்களும், பெண்களும், கீழ்க்குடியனிரும் உயர்குலத்தினரும், நகரவாசிகளும், கிராமவாசிகளும் எல்லோரும் சரிநிகர் சமமானவர்கள் என்ற அவரது கருத்துத்தான் மக்களை காந்திய இயக்கத்துக்குள் இழுத்தது. இந்தியாவின் நீண்ட வரலாற்றில் ஒவ்வொரு சீர்திருத்தவாதியும் ஜாதிமத அமைப்புக்கும், பெண்களின் கீழ் நிலைக்கும் எதிராகப் போராடி வந்தார்கள். இருப்பினும், காந்திஜி எந்த அளவுக்கு ஒதுக்கல் முறைகளைத் தகர்த்தாரோ, அந்த அளவுக்கு வேறு எவரும் வெற்றிபெறவில்லை. இந்தியப் பெண்கள் அவருக்குப் பிரத்யேகமாக நன்றிக் கடன் பட்டிருக்கிறர்கள். பல நூற்ருண்டுகளாக இருந்துவந்த இன்னல்களிஞல் சிரமமுற்ற வேறு எல்லாப் பிரிவினரும் இவ்வாறே அவருக்கு நன்றிக் கடன் பட்டிருக்கிறர்கள்.

மகாத்மா காந்தி ஒரு தடவை எழுதினர்; 'ஒருவரும் தம்மை, காந்தியை பின்பற்றுபவர் என்று கூறிக் கொள்ளவேண்டாம். நான் என்னையே பின்பற்ற முடிவதில்லை. ஏனென்றல், எனது எண்ணங்களுக்கு ஏற்ப என்ஞல் வாழ முடியவில்லை''

எல்லாவற்றையும் ஆராய்ந்து, எல்லாவற்றுக்கும் ஒரு சமரச வழியைக் கண்டு பிடித்து, எந்த நிலைமைக்கும் ஒரு வழிமுறையை நிர்ணயிக்கும் அளவுக்கு உலக தத்துவம் ஒன்றை காந்திஜி வகுத்தார் என்று நாம் நம்பவேண்டுமென காந்தியவாதிகள் கூறுவார்கள். அனைத்தும் அறிந்தவர் என்று ஒரு போதும் கூறிக்கொள்ளாத ஒருவரைப்பற்றி, சத்தியத்துடனும், அறிவுடனும் தமது பரிசோதனைகளை ஒரு போதும் நிறுத்திக் கொள்ளாத ஒருவரைப்பற்றி இவ்வாறு கூறுவது நியாயமாகாது. அவர் ஒன்றிணைந்த மனிதராக இருந்த போதிலும், தனிப்பட்ட முழுமைகளுடனும் விவகாரம் வைத்துக் கொண்டதில்லை. அவரைவிட பெரிய லட்சியவாதிகள் இருந்திருக்கலாம். ஆனல் நடைமுறைச் சாத்தியமான கொள்கைகளைப் பொறுத்தவரை அவரைவிட சிறந்த மனிதர் இருந்திருக்க முடியாது. அடிப்படை உண்மைகளை அவர் எடுத்துச் சொன்னர். ஆனல் அவர் வகுத்த ஒவ்வொரு நடவடிக்கைத் திட்டத்திலும் 'நான் ஒரு அடி எடுத்து வைத்தால் போதும்'' என்ற அடிப்படையிலேயே முன்னேறினர்.

கடந்த 20 ஆண்டுகளில் நாம் பின்பற்றிவரும் திட்டமிட்ட தொழிவளப் பெருக்கக் கொள்கை, காந்திய தத்துவத்தைக் கைவிடுவதற்கு ஒப்பானதாகும் என்று சிலர் குறை கூறுகிறர்கள். இந்தக் குற்றச்சாட்டைத் தெரிவித்து, குடிசைத் தொழில்கள்தான் வேண்டும் என்று கூறுவோர் கூட விமானங்கள், மோட்டார்கார்கள், டெலிபோன்கள் போன்ற பெரிய தொழில்களின் செய்பொருள்களை உபயோகிக்காமல் இருப்பதில்லை. காந்திஜி ரெயில்வே அமைப்பை வெறுக்கவில்லை. அவர் கடிகாரங்களைத் தவருமல் பயன்படுத்தி வந்தார். ரெயில் வண்டிகளையும், கடிகாரங்களையும் உபயோகித்துக் கொண்டு அவற்றை நாமே தயாரிக்கக்கூடாது என்று சொல்வதில் அர்த்தமிருக்க

[ 7-ம் பக்கம் பார்க்க ]

# வியக்கத்தக்க உத்தியான பண்டிதர்

1965ம் ஆண்டு உத்தியான பண்டிதர் விருது பெற்ற ஜன்னா ரெட்டியைக் கண்டோர் பெரும் வியப்பெய்தினர்.

ஏனெனில் பலரும் உகக்கும் இவ்விருதைப் பெறுபவர் எப்படியெல்லாம் இருப்பாரென்று நாம் கற்பனை செய்கிறோமோ, சுதீர் ரெட்டி அவைகளுக்கு அனேக வகைகளில் மாறாக இருந்தார்.

முதலாவதாக வயது: உத்தியான பண்டிதர் விருது பெற்ற ஒருவர் சாதாரணமாக 40, 50 வயதில் அனுபவத்தில் முதிர்ந்த தோற்றத்துடனிருப்பார் என்று நாம் எதிர்பார்ப்பதற்கு மாறாக சுதீர் ரெட்டி இருபத்தாறே வயது நிறைந்த இளைஞர்.

இரண்டாவதாக, தோட்டம் சிறியதாக இருந்தால், பழச் சாகுபடி செய்து, வெற்றியும் அடைந்து விருது பெறுவது சாத்தியமே. ஆனால், ரெட்டியுடைய தோட்டமோ 260 ஹெக்டேருக்கும் மேற்பட்ட விஸ்தீரணம்கொண்டது. இம் மாதிரியான தோட்டங்களுள் இந்தியாவிலேயே பெரியது இவருடையதுதான். வேறெங்கிலும்கூட, இவ்வளவு பெரிய பழத் தோட்டம் இருக்குமா என்பது சந்தேகந்தான்.

மூன்றாவதாக, சில வருடங்கள் முன் வரை தரிசாகக் கிடந்த ஒரு நிலம், முதல்தர மாந்தோட்டமாகிப் பரிசுப் பெறும் என்பது எண்ணிப் பார்க்க முடியாத விஷயம். ஆனால், சுதீர் ரெட்டி இதைச் செயலாக்கிக் காண்பித்தார். பரிசு பெற்ற சுதீர் ரெட்டியின் 380 ஹெக்டேர் விஸ்தீரணமுள்ள தோட்டம் ஏழு வருடங்கள் முன் வரையில் பாழ் நிலமாகக் கிடந்தது!

ரெட்டி யெர்ர பஹாட் என்ற சிறிய கிராமத்தைச் சேர்ந்தவர். (யெர்ர பஹாட் என்றால் தெலுங்கில் சிவப்பு மலை என்று பொருள்). யெர்ர பஹாட் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள ஸீர்யபெட்டிற்கு 18 மைல் தெற்கில் உள்ளது. ரெட்டியின் நிலம் யெர்ர பஹாடிற்கு அருகாமையிலிருக்கிறது.

விவசாயியின் மகனாயினும் ரெட்டி கல்லூரிப் படிப்பை மேற்கொண்டிருந்தார். 1959இல் இவர் படிப்பைவிட்டு குடும்பத் தொழிலான விவசாயத்தை மேற்கொள்ள நேர்ந்தது.

தரிசாகக் கிடந்த குடும்ப நிலத்தைக்கண்டு உற்சாகம் குன்றிப் போவதற்குப் பதிலாக, இந் நிலத்தைத் திருத்தி லாபகரமான பழத் தோட்டமாக்குவதென்று தீர்மானித்தார் ரெட்டி.

இதற்கு ஆரம்பமாக, உள்ளூர் விவசாய வல்லுநர்களின் உதவியுடன் ஒரு திட்டம் தயாரித்துக்கொண்டார். முதலாண்டிலேயே எட்டு ஹெக்டேர் நிலம் பண்படுத்தப் பட்டு இதில் பூனா, நிஜாம்பூர் இவைகளிலிருந்து தருவிக்கப்பட்ட ஜாதி மாங்கன்றுகள் நடப்பட்டன. சிறிது சிறிதாக விஸ்தரித்த இம் மாந்தோட்டம் ஐந்தாண்டுகளில் 260 ஹெக்டேராகப் பரவிற்று.

ரெட்டி தன்னுடைய தோட்டத்திற்காகத் தேர்ந்தெடுத்தவை பென்ஷன், மல்கோவா, நீலம் தோதாபுரி, செருகுரஸம், அல்பான்ஸோ ஆகிய மாங்கனி வர்க்கங்கள். அவருடைய தோட்டத்தின் பெரும் பகுதியில் இப்பழங்களும், 20 ஹெக்டேரில் சப்போடா பழமும் 100 ஹெக்டேரில் நெல், சிறு தானியங்கள் நிலக்கடலை, பருப்புகள், காய்கறி முதலானவையும் விளைகின்றன.

இரண்டு டிராக்டர்களும் 25 ஜோடி எருதுகளும் தோட்டத்தை உழப் பயன்படுகின்றன. பழத் தோட்டம்போட்டு, வெற்றி பெறும் ரகசியத்தை இளைஞர் ரெட்டி நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறார். சுருங்கக் கூறினால், உழுதல், எரு விடுதல், பாசனம் செய்தல்; இவைகளே இவரது வெற்றியின் ரகசியம்.

[ 5-ம் பக்கம் பார்க்க ]



ரெட்டியின் 260 ஹெக்டேர் பழத்தோட்டத்தின் ஒரு பாகம். குறுக்கும் நெடுக்கமாக ஓடும் சிமிண்டு வாய்க்கால்களைக் (உள் படம்) கவனிக்கவும்.

# அண்ணல் காந்தி நூற்றுண்டு விழா சிந்தனைகள்



**6—10—68 ஞாயிற்றுக்கிழமை**

"நான் கனவு காணும் இந்தியா ஏதாவது ஒரு சமயத்தை--அதாவது முற்றிலும் ஹிந்து மதம் என்றே, முற்றிலும் கிருஸ்துவ மதம் என்றே, முற்றிலும் இஸ்லாம் மதம் என்றே—வளர்க்காது. ஒவ்வொரு சமயமும் ஒன்று இசைந்தவாறு இயங்கும் முழு சகிப்புத் தன்மை உள்ள நாடாக இருப்பதையே விரும்புகிறேன்."

**7—10—68 திங்கட்கிழமை**

"வன்முறைச் செயலிலோ, கொள்ளையடிப்பதிலோ, தீ வைப்பதிலோ ஈடுபடுவதை சத்தியாக்கிரகம் அனுமதிக்காது."

**8—10—68 செவ்வாய்க்கிழமை**

"ஒரு பொது ஊழியர் எதையுமே நன்கு உறுதி செய்துகொண்ட பிறகுதான் அறிக்கை விடுக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக உண்மையை விரும்புவோர் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்."

**9—10—68 புதன்கிழமை**

"ஒரு பிரஜை, தனது சொந்த சுதந்திரத்தைப் பெறும் பொருட்டு நாட்டின் சட்டத்துக்கு அடி பணிய வேண்டும்."

**10—10—68 வியாழக்கிழமை**

"நாம் அனைவரும் தத்தம் கடமையைச் செய்தால், உரிமையைத் தேடிச் செல்ல வேண்டியிருக்காது."

**11—10—68 வெள்ளிக்கிழமை**

"சொந்த நலனுக்காக சத்தியாக்கிரக முறையை ஒரு போதும் பிரயோகிக்க முடியாது."

**12—10—68 சனிக்கிழமை**

"ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை எல்லா காலத்திலும், எல்லா சூழ்நிலையிலும் நமது சமய நம்பிக்கையாக இருக்க வேண்டும்."

**13—10—68 ஞாயிற்றுக்கிழமை**

"சமூக சேவை பயனுள்ளதாக இருக்க வேண்டுமானால், அதைச் சத்தம் போடாமல் செய்ய வேண்டும்."

# குடும்பக் கட்டுப்பாடும்

## போப்பாண்டவர் சுற்றறிக்கையும்

மானுட வாழ்வு எனும் தலைப்பில் ரோமன் கத்தோலிக்க திருச் சபையின் போப்பாண்டவர் குடும்பக் கட்டுப்பாடு குறித்து வெளியிட்ட சுற்றறிக்கைமீது நொய்ஸ் டாயிஷ்லாண்ட் (ஜி. டி. ஆர்.-ன் தலையாய நாளிதழ்) கருத்து தெரிவித்திருக்கிறது.

"மானுடப் பண்பை வெளியிடும் வகையில் கணவன் மனைவிக்கிடையேயும், பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையேயும், உண்மையான பரஸ்பர அன்பையும் ஆதரவையும் நிலைபெறச் செய்யும்படியும் வளர்க்கும்படியும் உலகில் அதிகாரச் செல்வாக்குள்ளவர்களைப் போப்பாண்டவர் அறைகூவி அழைக்கிறார் என்றால், மார்க்ஸிய-லெனினிய வாதிகளாகிய நாங்கள் அதை முழுக்க முழுக்க ஒப்புக்கொள்கிறோம்." முன்பு காலனி நிலையிலிருந்த நாடுகளின் பிரச்சினைகளைப் பொருளாதார—சமுதாய முன்னேற்றத்தின் வழியே தீர்த்திடுக என்று போப்பாண்டவர் வெளியிட்டுள்ள கோரிக்கையை நியாய சிந்தனை படைத்த பல மக்கள் புரிந்து கொள்ளவும் முடியும்."

அது மேலும் எழுதுவதாவது: "ஆனால், நவீன காலத்திய மருத்துவத் துறையின் நிர்ணயமான முன்னேற்றங்களை அப்படியே ஒதுக்கி விலக்கிய நிலையிலே மானுட வாழ்வு பற்றி ஒரு சித்திரம் தீட்டிக் காட்டினால் — கருத்தடை சாதனங்களை அடியோடு நிராகரித்தால்-நாங்கள் எங்கள் கருத்து வேறுபாட்டை எடுத்துச் சொல்லித்தான் ஆக வேண்டியுள்ளது. மானுட வாழ்வைத் தொடர்ந்து படைக்கும் பிள்ளைப்பேறு விஷயத்தை உடலில் சம்பந்தப்பட்ட தற்செயல் நிகழ்ச்சிக்கு விட்டு விடுவது நம் காலத்துக்கு ஒவ்வாதது என்றே தோன்றுகிறது.

"தன் உடல்மேல் தானே ஆட்சி கொள்ளும் சாத்தியப்பாட்டை மருத்துவயியல் மனிதனுக்கு வழங்கியுள்ளது. இதனால், முதல் நிலையாகப் பெருமளவுக்கு மாதர்களுக்கு நன்மை உண்டு. மாதர்கள் நிச்சயமற்ற சூழ்நிலையில் சஞ்சலப்படுவதும் வேதனைப்படுவதும் அகன்று சுதந்திரம் பெறுகிறார்கள். ஆகவே, குழந்தைகள் விஷயத்தில் பெற்றோர்களுக்குள்ள பொறுப்புக்கு சமுதாய—தார்மீக அடிப்படை இருக்கிறதோடுகூட ஒரு உடலியல்—மருத்துவயியல் அம்சமும் சேர்ந்து விடுகிறது. இன்று, அன்பு நிறைந்த நிலையிலும் சுதந்தரமாக முடிவெடுத்த நிலையிலும் குழந்தைகளைப் பெற்று மானுட வாழ்வைத் தொடர்ந்து காத்துவர முடியும்.

"முற்போக்கான சமுதாய நிலைமைகளில் ஒரு பொறுப்புணர்ச்சியுள்ள குடும்பக் கட்டுப்பாடுத் திட்டம் கணவன் மனைவி இடையேயும், பெற்றோர்கள் குழந்தைகள் இடையேயும் உள்ள அன்பைக் குறைப்பதற்குப் பதிலாக வளர்க்கவே செய்கிறது என்று வெகு காலமாகவே ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு உட்பட பல நாடுகளில் நிலைநாட்டப் பெற்றிருக்கிறது."

—

# இந்தியக் கண்காட்சி

இந்தியக் கலாசாரத்தை எடுத்துக்கூறும் கண்காட்சி ஒன்று அஷ்காபத்தில் ஆரம்பமாயிற்று. இந்திய இதிகாசங்களும் இலக்கிய நூல்களும், சககால நூல்களும் இதில் இடம் பெற்றுள்ளன. தாகூர், ஜவாஹர்லால் நேரு ஆகியோரின் நூல்களும் இக்காட்சியில் உள்ளன.

இந்தியாவுக்கு முன்னர் வருகை தந்துள்ள பிரபல துருக்மீனிய எழுத்தாளர்களான பெர்தா கெர்பயேவ், அன்னு கேவுசோவா, காரா செய்திலியேவா ஆகியோரின் நூல்களும் கூட இக் கண்காட்சியில் இடம்பெற்றுள்ளன. துருக்மீனிஸ்தானத்தில் அக்டோபரில் 10-ல் 10 தினங்கள் நடைபெறவிருக்கும் இந்திய கலாசார விழாவையொட்டி நடைபெறுவதாகும் இது.

——

[ 3-ம் பக்கத் தொடர்ச்சி ]

பழத்தோட்டத்தில் வெவ்வேறு பாகங்களில் நிறுவப்பட்டிருக்கும் மின்சாரப் பம்பு கொண்ட கிணறுகள் தோட்டத்தின் தண்ணீர்த் தேவையைப் பூர்த்தி செய்கின்றன. சிமிண்டு வாய்க்கால்கள் தண்ணீர்த் தேவைப்பட்ட இடங்களுக்குக் கொண்டு போகின்றன. சிமிண்டு வாய்க்கால்கள் கட்டச் செலவு அதிகமாகிறது. ஆனால், இவை நாள்பட்டு வருகின்றன, தண்ணீர் கசிந்து வீணுவதில்லை. மேலும், தண்ணீரை எந்த மூலைக்கு வேண்டுமானாலும் கொண்டு போகலாம்'' என்று இவ் வாய்க்கால்களைப் புகழ்கிருர் ரெட்டி.

நியமத்துடன் இடையுழவு செய்வதில் நம்பிக்கை கொண்டிருக்கிருர் ரெட்டி. மழை பெய்தவுடன் தோட்டத்தை நான்கு முறை உழுது, தழை எருவாக ஸன்ஹெம்ப், உளுந்து பில்லிப் பெசரு முதலியவைகளை மரங்களை மக்கிடையில் பயிர் செய்து, ஆகஸ்ட்-செப்டம்பர் மாதத்தில் இவற்றை நிலத்துடன் மறித்து உழுது விடுகிருர். ஒவ்வொரு மரத்திற்கும் ரெட்டி 15 கிலோ அமோனியம் ஸல்பேட், 1·5 கிலோ ஸூபர் பாஸ்பேட், 3·5 ஆமணக்குப் பிண்ணக்கு இவைகளைக் கலந்து எருவாக இடுகிருர். எரு விட்டவுடன் ஒருமுறை தண்ணீரும் பாச்சுகிருர்.

நோய், பூச்சி இவைகளிலிருந்து தோட்டத்தை மிகவும் எச்சரிக்கையுடன் பாதுகாக்கிருர் இவர். மரங்களை வெட்டுப் பூச்சி, பூஞ்சாண நோய் இவைகள் தாக்காமலிருக்க மாம்பூக்கள் மலர்வதற்கு முன்னர் இரண்டு தரமும், மலர்ந்த பின்னர் இரண்டு தரமுமாக சல்பா – டி. டி. டி. கலவையைத் தெளிக்கிருர்.

உழைப்பு வீண் போவதில்லை. சுதீர் ரெட்டியின் உழைப்பு, ஹெக்டேர் ஒன்றுக்கு ரூ. 2500 நிகர லாபமாக உருவெடுத்தது. இத் தொகை மற்ற பழத் தோட்டக்காரர்களுக்குச் சாதாரணமாகக் கிடைக்கும் லாபத்தைவிட மூன்று பங்கு கூடுதலானது.

இவ்வளவு கருத்துடன் பராமரிக்கப் பட்ட மாங்கனிகள் சந்தேகமில்லாமல் கண்ணுக்குக் கவர்ச்சிகரமாகத் தான் இருக்க வேண்டும். பழத் தோட்டமும் பழங்களும் தேர்வுக் குழுவினரையும் மற்ருேரையும் கவர்ந்தன. இப் பழத் தோட்டத்தைப் பார்க்கும் யாவருக்கும் இதன் உரிமையாளரைப் பற்றி நினைக்கும்போது, 'மூர்த்தி சிறிய தாயினும் கீர்த்தி பெரியது என்ற பழமொழி நினைவிற்கு வராமற் போகாது.

# பருப்புச் சாகுபடி வளருகிறது



பருப்புகள் புரதச் சத்து நிறைந்த உணவுப் பொருள்கள். கூட்டுப் பருப்புத் திட்டத்தின் ஆதரவில் இவற்றின் சாகுபடி வளருகிறது.

துவரை பலனளிக்க எட்டு ஒன்பது மாதங்கள் ஆக வேண்டிய அவசியமில்லை. அது பல உள்ளூர் ரகங்களவ்வளவு உயரமாக வளர வேண்டுமென்பதுமில்லை. ஹைதராபாதிலுள்ள பிராந்தீய ஆராய்ச்சிக் கழகத்தில், ஒரு மீட்டர் உயரம் கூட இல்லாத குள்ள ரகத் துவரைகள் மகசூலில் உள்ளூர் ரகங்களை மிஞ்சி விட்டன. மற்றொரு விசேஷமென்னவென்றால், இப் புது ரகங்கள் மூன்றிலிருந்து நான்கு மாதங்களில் தானியம் கட்ட ஆரம்பித்து விடுகின்றன.

இப்புது ரகத் துவரைகள், தற்சமயம் கூட்டாகப் பணியாற்றி வரும், தில்லி இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம், யு.எஸ். ஏ. ஐ. டி. இவைகளின் 'கூட்டுப் பருப்புத் திட்ட'த்தின் வெற்றியைக் குறிப்பிடுகின்றன.

இத் திட்டத்தின் தலைமைக் காரியாலயம் இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகத்திலிருக்கிறது. இங்கு பருப்புகளின் பொதுப் பிரச்சனைகள் கவனிக்கப் படுகின்றன. பிராந்தீயப் பிரச்னைகள் ஜபல்பூரிலும், ஹைதராபாதிலுமுள்ள காரியாலயங்களிலும், லுதியானா, வாராணாசி மற்றும் கோயம்புத்தூரிலுள்ள உப காரியாலயங்களிலும் கவனிக்கப் படுகின்றன.

இத் திட்டம் வலுவடைந்தால் பருப்பு மேம்படப் பல வழிகளேற்படும். 17,000 பருப்பு வகைகள் தேர்வுக்காகவும், சோதனைகாகவும் சேகரிக்கப் பட்டிருக்கின்றன.

இப் பருப்பு ரகங்கள், ஏற்கனவே நம் நாட்டில் உற்பத்தி செய்துள்ள மேம்படுத்தப்பட்ட வகைகளுடன் ஆராய்ச்சிக் கழகங்களில் தேர்ந்தெடுக்கவும் செய்திருக்கின்றன.

தற்போது நம் நாட்டில் பருப்பு உற்பத்தி இருக்கும் நிலையை உணர்ந்தால், இத் திட்டத்தின் பயன் தெளிவாகும். தற்சமயம் இந்தியாவில் 24 மில்லியன் ஹெக்டேர் நிலத்தில் ஆண்டொன்றுக்கு 12 மில்லியன் டன் பருப்பு உற்பத்தியாகிறது இக் கணக்கின் படி, ஒரு ஹெக்டேரில் உற்பத்தியாகும் பருப்பு ஆண்டொன்றுக்கு சராசரி 400 கிலோ. 1949-ஆம் ஆண்டிலிருந்து 1965 வரையில் பருப்பு உற்பத்தி 1·86 சத விகிதம் அதிகரித்தது. இந்த அதிகரிப்பும் சாகுபடி செய்யும் நிலத்தின் பரப்பை அதிகரித்ததனால் ஏற்பட்டது. ஹெக்டேர் ஒன்றுக்கு அப்போது கண்ட மகசூல் அதே அளவிற்கு நிலைத்து நின்றுவிட்டது. ஒரு விதத்தில் குறைந்து விட்டது என்று கூடச் சொல்லாம். 1959-ல் நபர் ஒன்றுக்கு 74·7 கிராம் பருப்புகள் கிடைத்து வந்தன. இப்பொழுது கிடைப்பது 41 8 கிராம்.

பருப்புகள் புரதச் சத்து நிறைந்தவை. அநேகமாக இந்தியர்கள் உண்ணும் உணவில் புரதச்சத்து மிக்க பொருள் பருப்புகள் தான். இந்திய உணவில் சராசரி நான்கில் ஒரு பங்கு பருப்புகள் இடம் பெறுகின்றன.

ஆனால், உட்கொள்ளும் பருப்புகளின் அளவு, வேண்டிய புரதச் சத்தளிக்கப் போதுமானதல்ல.

விவசாயிகள், பருப்பை முக்கியமானதொரு உணவுப் பொருளாகக் கருதுவதில்லையாகையால் அவர்கள் பருப்புச் சாகுபடிக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. மிகவும் செழிப்பான நிலங்களை நெல் முதலியவைகளுக்கும், அதற்கடுத்தபடியான நிலத்தைச் சிறு தானிய வகைகளுக்கும் கடைத் தரமான நிலத்தையே பருப்புகள் சாகுபடிக்கும் விடுவது வழக்கமாக இருக்கிறது. இதிலும் பத்து சத விகித நிலமே பாசனம் செய்யப் படுகிறது. மற்றவற்றிற்கு வானமே கதி!

நாட்டில் பருப்புச் சாகுபடியை அதிகரிக்க, நல்ல விதைகளில்லாமை ஒரு பெரிய தடை.. பருப்புச் சாகுபடியை அதிகரிக்க விவசாயிகளுக்கு ஆலோசனை கூறப் போதுமான பரிசோதனைச் சாலைகளும் இல்லை.

இக் குறைகளையெல்லாம் நிவர்த்திக்கவே கூட்டுப் பருப்புத் திட்டம் நிறுவப் பட்டிருக்கிறது. பெருமளவில் மகசூல் கொடுக்கும் ரகங்களை உருவாக்குதல், உரம், பாசனத் தேவைகளைக் நிர்ணயித்தல், தரமான நடவு முறையைப் பெருக்குதல், பயிருக்கு எதிரிகளான களை, பூச்சி, நோய் இவைகளைத் தடுக்கும் முறையைக் கண்டு பிடித்தல் ஆகிய பல தரப்பட்ட ஆராய்ச்சியில் இத் திட்டம் ஈடுபட்டிருக்கிறது.

இக் குறுகிய காலத்திற்குள் இத் திட்டத்தின் ஆராய்ச்சிகளின் விளைவுகளைப் பார்த்தால், பருப்புச் சாகுபடியின் எதிர் காலத்தைப் பற்றி ஓரளவு ஊகிக்கலாம். இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம் ரபி, கரீப் சாகுபடிகளுக்கு இடைக்காலத்தில் பயிர் செய்ய, 2 மாதம் 15 நாட்கள் தானியம் கட்டும் 'பைசாகி' பச்சைப் பயறு ரகத்தை உருவாக்கி இருக்கிறது. 'பைசாகி' பயறு ஹெக்டேர் ஒன்றுக்கு ஒரு டன்னிற்கும் அதிகமான மகசூல் கொடுக்கிறது.

[ 8-ம் பக்கம் பார்க்க ]

[2-ம் பக்கத் தொடர்ச்சி]

முடியுமா? ஆதலால் குடிசைத் தொழில்கள் வேண்டும் என்ற காந்திஜியின் கருத்தை அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப புரிந்துகொள்ளவேண்டும். அவர் ஏழ்மையை அகற்றுவது பற்றி பெரிதும் கவலைப்பட்டார். வீணாவதை அவர் எதிர்த்தார். ஏராளமான வேலையற்ற கிராமவாசிகளின் மறைந்திருக்கும் ஆற்றலை முழுமையாய்ப் பயன்படுத்தி, நாட்டுக்கு பொருள்களையும் அவர்களுக்கு செல்வத்தையும் வழங்க முடியும் என்று அவர் கருதினார். தொழில்வள நடவடிக்கைகளின் முதல் கட்டத்தில் இருந்த மோசமான விளைவுகளை அவர் எதிர்த்தார். மனிதனின் இறுதியான வாழ்க்கை நிலைமை பற்றி கவலை கொண்ட ஒரு முனிவரைப் போல, நமது சொந்தக் கண்டுபிடிப்புக்களின் கைதிகள் ஆகிவிடக்கூடாது என்று அவர் நம்மை எச்சரித்தார். அவர் யந்திரங்களைப்பற்றி நிறைய எழுதியிருக்கிறார். அவர் எழுதியதை அப்படியே விளக்கிக் கூறும் சிலர், நாம் ஒரு குறிப்பிட்ட விதத்தில்தான் அதைப் புரிந்துகொள்ள வேண்டும் என்று கருதுகிறார்கள். ஆனால் காந்திஜியின் கருத்துக்கள் அதைவிட விரிவானவை, நடைமுறைச் சாத்தியமானவை என்பதுதான் உண்மை.

என்னைப் பொறுத்தவரை காந்திஜி சுவையற்ற சிந்தனைகள், சித்தாந்தங்கள் ஆகியவற்றின் ஒரு தொகுப்பாக இருக்கவில்லை. ஒரு மனிதன் எந்த அளவுக்கு உயர முடியுமோ அந்த உயர்ந்த நிலையைத்தான் அவர் நினைவுபடுத்துகிறார். கடந்த காலத்தின் சிறப்பில், நிகழ்காலத்தில், வருங்காலத்திற்காகவே அவர் வாழ்ந்தார். ஆதலால்தான் அவரது உயர்ந்த சிந்தனைகள் காலத்தைக் கடந்தவையாக இருக்கின்றன. உடனடிப் பிரச்னைகளைத் தீர்ப்பதற்காக அவர் எவ்வளவோ சொன்னார், எவ்வளவோ எழுதினார். தனி நபர்களின் உள் உணர்வுக்கு வழிகாட்டுவதற்காக சில கருத்துக்களை வெளியிட்டார். ஆனால் பல அம்சங்களிலிந்து உருவாக்கப்பட்ட தகவல்களை வைத்துக்கொண்டு அவர் அறிவை வளர்க்கவில்லை. தமது வாழ்க்கை எனும் பரிசோதனைச் சாலையில் தமது எண்ணங்களைக் கருவிகளாகப் பயன்படுத்தியவர் காந்திஜி.

தென் ஆஃபிரிக்காவில் அவர் ஆற்றிய பணியைப் கோபால கிருஷ்ண இத்தகையோரின் கோகலே குறிப்பிடுகையில், காந்திஜி களிமண்ணிலிருந்து வீரர்களை உருவாக்கினார் என்று கூறுகிறார். நாம் மறுபடியும் களிமண் ஆகிவிட்டோமா என்று சில சமயம் நான் எண்ணுவதுண்டு. ஒரு உண்மையான மாபெரும் போதகர். தமது காலத்தில் உருவாக்கும் உயர்வு நீண்ட நாட்களுக்கு இருக்கமுடியாது. ஆனால் இத்தகையோரின் அறிவுரையும், சிந்தனையும் தங்கள் காலத்தையும் நாட்டையும் கடந்து செல்கின்றன. காந்திஜியின் சொந்த வாழ்நாளில், காந்திஜியின் சொந்த நாட்டில் பிறந்த நமக்கு அவரது முறைகளைப் பின்பற்றும் கடமை உண்டு. அவரது சொற்களை விட அவரது வாழ்க்கைதான் அவரது அறிவுரையாக இருந்தது.

ஒரு மனிதன் தாம் வாழும் காலமும், இடமும் அப்படியிருந்தும் கூட சாதனை புரிகிறார் என்பதைவிட அந்தக் காலம், இடம் ஆகியவற்றின் மூலம் உண்மையான உலக உணர்வுத் தன்மையைப் பெறுகிறார் என்றுதான் சொல்ல வேண்டும். காந்திஜி இந்தியாவின் சாதாரண மக்களுடன் தம்மை முழுமையாக ஒன்றுபடுத்திக் கொண்டவர். இதற்காக தாம் அணியும் உடைகளைக் கூட மாற்றிக் கொண்டவர். இருப்பினும் உலகின் மற்ற பகுதிகளிலிருந்துவந்த மிகச் சிறந்த சிந்தனைகளை அவர் வரவேற்றார். அவர் எப்போதுமே சுத்தமாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார். தாம் கேள்விப்பட்டதையெல்லாம் சாட்சி சொல்வது சம்பந்தப்பட்ட சட்டத்தின் விதிமுறைகளை பிரயோகித்து சரிபார்த்து வந்தார். இங்கிலாந்திலும், தென் ஆஃபிரிக்காவிலும் ஒரு வழக்கறிஞராகவும் அவர் வாழ்ந்த நாட்களில் அவரது மனத்தில் ஏற்பட்ட நிலையான விளைவுகளைத்தான் இவை எடுத்துக் காட்டுகின்றன. அவர் பெற்றதையெல்லாம் தம்முடன் ஒன்றுபடுத்திக் கொண்டார். இந்தியப் பிரச்சனைகளுக்கு இந்தியத் தீர்வுகளைக் கண்டார்.

அவர் விட்டுச்சென்ற மற்றொரு மரபு சமயச் சார்பின்மையாகும். இதற்காக அவர் உயிரையே கொடுத்தார். சமயச் சார்பின்மை என்றால், சமயப் பற்று இன்மை என்றோ, சமயத்தின் பால் அலட்சியமாக இருப்பது என்றோ, அர்த்தமில்லை. எல்லா சமயங்களுக்கும் சம மதிப்பு கொடுப்பது என்பது தான் பொருள். அது வெறும் சகிப்புத்தன்மை அல்ல. செயலான மதிப்பு ஆகும். சமயச் சார்பின்மைக்கு இடைவிடாத சுய பரிசோதனையும் குன்றாத உழைப்பும் தேவைப்படுகின்றன. மாற்றாரது சமயத்தை மதிக்கவில்லை. என்றால், ஒருவரும் தமது சொந்த சமயத்தை மதிக்க முடியாது என்று அசோகர் ஒரு பேருண்மையை பொறித்துச் சென்றார். இந்த உண்மையை ஏற்றுக் கொண்டு ஆட்சியாளர்கள் இதற்கு ஏற்றபடி நடந்த சமயங்களிலெல்லாம் இந்தியா சிறந்த நாடாக இருந்

திருக்கிறது, உயர்ந்த நிலைக்குச் சென்றிருக்கிறது. நமது காலத்தில் காந்திஜியும், ஜவாஹர்லால் நேருவும் நமக்காக இதை ஒரு வாழும் உண்மையாக அமைத்தார்கள். இது இல்லாவிடில் நம் நாட்டுக்கு வருங்காலமே இல்லை.

காந்திஜி நமக்குத் தந்த மற்றொரு சிறந்த அறிவுரையைப் பற்றி, அஹிம்சை பற்றி பேசத்தயங்குகிறேன். வன்முறை நியாயமாக இருப்பதற்கான காரணங்களைக் கண்டதினால் நான் இப்படித் தயங்கவில்லை. மனிதகுலம் அழிவு ஆயுதங்கள் பலவற்றை பயங்கரமான அளவுக்குக் குவிந்து வைத்திருக்கிறது. நம்பிக்கை கொள்வதற்கான உரிமை நமக்கு இருக்கிறதா என்று கூட நான் சிலசமயம் எண்ணுவதுண்டு. அங்குமிங்கும், இப்போதும் போர் மூளுகிறது.

ஆனால் உலகின் எல்லா பகுதிகளிலும் சிந்தனையில் பகைமையும், செயலில் வன்முறையும், கண்மூடித்தனமான கிளர்ச்சிப் போக்கும் வளர்ந்து வருவதுதான் மேலும் கவலையைத் தருகிறது, பீதியைத் தருகிறது. இருள் சூழ்ந்திருந்த போதிலும், ஒளி தொடர்ந்து இருக்கிறது என்று காந்திஜி கூறினார். நமக்கு நம்பிக்கை வேண்டும். ஆயுத பலத்தை ஆயுதங்கள் இல்லாமல் எப்படி எதிர்ப்பது என்பதை காந்திஜி நிரூபித்துக் காட்டினார். இது ஒரு தடவை நடக்குமானால், மறுமுறையும் நடக்கமுடியாதா என்ன?

வாழ்க்கை என்பது போராட்டம். உயர்ந்த நிலையில் செல்லவேண்டும் என்று நோக்கம் கொண்டால், மேலும் அதிகமாய் சாதனை செய்ய வேண்டுமென்று விரும்பினால், மேலும் அதிக அளவில் பணி புரியவேண்டும், தியாகம் செய்யவேண்டும். சாசுவதமான உண்மைகளை எல்லா சமயங்களைச் சேர்ந்தவர்களும் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். பழமைச் சிறப்புடைய சிந்தனைக்கு மறுபடியும் புத்துயிரூட்டி, மக்கள் வாழ்வின் ஒரு பகுதியாக அதை அமைக்கும் வல்லமை வாய்ந்த தவப் புதல்வர்களைப் பெற்றெடுக்கும் பேறு இந்தியாவுக்குக் கிடைத்திருக்கிறது. நமது காலத்தில் மகாத்மா காந்தியும், ஜவாஹர்லால் நேருவும் பொது நலனில் தாங்களும் ஒன்றுசேர்ந்து, மிகச் சிரமமான காலத்தில் நமக்கு வழிகாட்டினார்கள். இவர்களில், ஒருவரை ஒருவர் முழுமைபெறச் செய்தார்கள். லட்சக்கணக்கான மக்களின் நலனுக்கு உரியதா என்று ஒவ்வொரு முடிவையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டுமென இவர்கள் அறிவுறுத்தினார்கள். எந்த ஒரு 'வாத'த்தையும்விட இந்தத் தத்துவம் நம்மை தவற்றிலிருந்து மீட்கும். ஒரு தடவை ஜவார்ஹர்லால் நேரு கூறியதைப்போல, "உண்மைக்காக நம்மை அர்ப்பணித்துக்கொள்வதென்றும், எந்தக் கொள்கைக்காக நம் நாட்டில் இந்த மகாபுருஷர் வாழ்ந்தாரோ, எதற்காக உயிர் நீத்தாரோ, அந்தக் கொள்கைக்காக நம்மை அர்ப்பணித்துக்கொள்வதென்றும் உறுதி மேற்கொள்வது தான் நாம் செய்யக்கூடிய மிகப்பெரிய பிரார்த்தனை."




## புத்துலகின் அழைப்பு !

[ திருச்சி பாரதன் ]

புத்துலகம் அழைக்கிறது
பூவைநிலை விரிக்கிறது
முத்தொளிபோல் வனப்புடனே
முத்தமிழின் செழிப்புடனே (புத்துலகம்)

எத்திடுவோர் நலிகின்றார்
இளைந்தவர்கள் குறைகின்றார்
ஒத்தமனம் வளர்கிறது
உண்மையன்பு படர்கிறது (புத்துலகம்)

வெறிவளர்க்கும் கொடுஞ்செயல்கள்
வைகுண்டெரிக்கும் பழியுரைகள்
நெறியழிக்கும் சமர்குணங்கள்
நிலையழிந்து சரிகிறது (புத்துலகம்)

[ 6-ம் பக்கத் தொடர்ச்சி ]

குறுகிய காலப் பயிரான ஜலகாவோன்-781 என்ற பயறு வகை மணற் பாங்கான பூமியைக் கொண்ட ஹிஸ்ஸார், ஹரியானாவில் பயிரிடத் தகுந்தது.

சாதாரணமாக, குறைவான மகசூலை தரும் இப் பயறு, மேம் படுத்தப் பட்ட சாகுபடி முறையை அனுசரித்த தன் பேரில் நான்கு மடங்கு அதிகமாக-ஹெக்டேர் ஒன்றுக்கு 2 டன் மகசூல் கொடுத்திருக்கிறது. இப் பயிருக்கு 100 ராத்தல் (ஒவ்வொன்றிலும் 50 ராத்தல்) என். பி. கே. கலவை உரமாக இடப்பட்டது. இதே போல், உத்தரப் பிரதேசத்திலுள்ள தெராய் பிரதேசத்தில் டி-21 ரகப் பயறு ஹெக்டேர் ஒன்றுக்கு 5 டன் மகசூல் அளித்தது. இதற்கு ஹெக்டேர் ஒன்றுக்கு 5 டன் மகசூல் அளித்தது. இதற்கு ஹெக்டேர் ஒன்றுக்கு 90, 120, 60 ராத்தல் (45, 60, 30 கிலோ) என். பி. கே. உரமிடப்பட்டது. சாதாரணமாக இப்பயறு ஹெக்டேர் ஒன்றுக்கு 1·2 டன் மகசூல் கொடுக்கக் கூடியது.

அதிக அளவில் புரதச் சத்துள்ள பருப்பு ரகங்களை உருவாக்குதல், கேசரி இனத்தைச் சார்ந்த பருப்புகளிலிருந்து விஷ அம்சத்தை விலக்குதல் முதலியவை இத் திட்டம் மேற் கொண்டுள்ள மற்ற ருசிகரமான பணிகளாகும்.

முன்னேறி வரும் 'கூட்டுப் பருப்புத் திட்டம்' தன் முயற்சியின் விளைவாக, நாட்டின் பருப்பு உற்பத்தியில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கி வைக்கும்.

— —

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10